4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10) மதுரை 8-7-72 சனி (மலர் 160

## இராணுவம் வரவழைக்கப்பட்டது

கோவை, ஜுலை 6—

போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து இரண்டாவது நாளாக இங்கு "பந்த்" நடைபெறுவதைச் சமாளிக்க இராணுவம் வரவழைக்கப்பட்டுள்ளது. சென்னையிலிருந்து 4 அணிகள் கோவைக்கு விரைந்துள்ளன.

## புதிய கல்லூரிகளை திறக்கவும்

### கேரளஅரசுக்கு இ. எம். எஸ். கோரிக்கை

கொல்லம், ஜுலை 26—

கல்லூரி கட்டண இணைப்பை எதிர்த்து தனியார் கல்லூரி நிர்வாகங்கள் கல்லூரிகளைத் திறக்காதிருக்கும் இடங்களில் அரசு புதிய கல்லூரிகளைத் திறக்க வேண்டும். என்று தோழர் இ.எம் எஸ். கோரினார்.

மதக் கல்வி அளிப்பதற்குத்தான் கல்வி நிலையங்களை நடத்துவதற்கு அரசியல் சட்டத்தில் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது என்றும் பொதுக்கல்வி அளிப்பதற்கு அத்தகைய பாதுகாப்பு அளிக்கப்படவில்லை என்றும் அவர் சுட்டிக்காட்டினார்.

## பேச்சுவார்த்தைக்குப் பதில் போலீசை ஏவிவிடுவதா?

### தோழர் ஏ. கே. ஜி. கண்டனம்

கோழிக்கோடு, ஜுலை. 6—

தமிழ்நாட்டில் பல இடங்களில் நடைபெற்றிருக்கும் துப்பாக்கிப்பிரயோகங்களை அகில இந்திய விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் ஏ. கே கோபாலன் கண்டித்துள்ளார், வெகுஜன இயக்கங்கள் சம்பந்தமாக திமுக அரசாங்கம் எத்தகைய தவறான நிலையைக் கடைப்பிடிக்கிறது என்பதற்கு இந்தத்துப்பாக்கிப் பிரயோகங்கள் மேலும் உதாரணமாக உள்ளன என்று அவர் கூறினார். சிம்சன் தொழிலாளர் போராட்டத்தில் ஏற்கனவே வெளிப்படுத்திய அடக்குமுறையை இப்போதும் மேற்கொண்டுள்ளது என்று தோழர் ஏ. கே ஜி. கூறினார்.



தமிழ்நாட்டில் நடைபெறும் போராட்டம் நிலப்பிரபுக்கள் தூண்டிவிட்டது என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கருதுவதாகவும் எனினும் பேச்சு வார்த்தை மூலம தீர்வு காண்பதற்குப் பதில் அடக்குமுறையை ஏவிவிட்டிருப்பதைக் கண்டிப்பதாகவும் அவர் கூறினார். 5 ஏக்கருக்குக் குறைவாக நிலம் வைத்திருப்பவர்களுக்கு மின் கட்டணத்தைக் குறைக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

## காஸ்டிரோ சோவியத் விஜயம் முடிந்தது

மாஸ்கோ, ஜூலை, 6—

பத்துநாள் சுற்றுப்பிரயாணத்தைமுடித்துக் கொண்டு கியூபாபிரதமர் காஸ்டிரோ புதன்கிழமையன்று தாயகம் புறப்பட்டார்.

விமான நிலையத்தில் சோவியத் தலைவர்கள் பிரஸ்னேவ், கோசிஜின், போட்கார்னி ஆகியோர் அவரை வழி அனுப்பினர்.

## போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து

# கோவையில் அர்த்தால்

## தொழிற்சாலைகள் பரிபூரண வேலைநிறுத்தம்

கோயமுத்தூர், ஜுலை. 6—

தமிழ்நாட்டில் நேற்று பல இடங்களில் நடைபெற்றிருக்கும் கண்மூடித்தனமான போலீஸ் துப்பாக்கிப் பிரயோகங்களையும் அடக்குமுறையையும் கண்டித்து இங்கு இன்று பரிபூரண அர்த்தால் நடைபெற்றது.

சி. ஐ. டி. யூ. சங்கமும் கொண்டபடி தொழிற் மற்ற சங்கங்களும் கேட்டுக் சாலைகளில் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்தனர்.

வேலை நிறுத்தம் செய்த பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்களும் மாணவர்களும் போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து ஊர்வலம் வந்தனர்.

72 மில்களிலும் எஞ்ஜினியரிங் தொழிற்சாலைகளிலும் பரிபூரண வேலை நிறுத்தம் நடைபெற்றது.

கோவை நகரத்திலும் சுற்றுப்பகுதிகளிலும் பஸ்களோ மற்ற வாகனங்களோ ஓடவில்லை.

ஆயுதம் தரித்த குண்டர்கள் பாலிடெக்னிக் மாணவர் ஒருவரைக் கடத்திச் சென்றதைக் கண்டித்து மருத்துவக் கல்லூரி மாணவர்கள் இன்று வேலை நிறுத்தம் செய்தார்கள்.

நேற்று ஒரு பஸ்ஸை நிறுத்த மாணவர்கள் முயன்றதையடுத்து ஆயுதம் தரித்த ஒரு குண்டர்கள் மாணவர் விடுதிக்குள் புகுந்து மாணவர்களைத் தாக்கினர். திரும்ப போலீஸ் உதவி கேட்டும் மாணவர்களுக்கு போலீஸ் பாதுகாப்பு அளிக்கப்படவில்லை.

குண்டர்களுக்கு ஆதரவாகப் போலீஸ் செயல்பட்டதைக் கண்டித்து கோஷங்களை எழுப்பிக் கொண்டு மாணவர்களும் தொழிலாளர்களும் ஊர்வலம் வந்தனர்.



மதுரை மாநாட்டு அணிவகுப்பில் கலந்துகொண்ட பல ஆயிரக்கணக்கான செந்தொண்டர் படையின் ஒரு பகுதி

## போராடிப் பெற்ற உரிமைகளைப் பாதுகாக்க

# தொழிலாளர்கள் ஒன்றுபட வேண்டும்

## மார்க்சிஸ்ட் கட்சி மாநாட்டின் தீர்மானம்

மதுரை, ஜுலை. 4—

**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் 9-வது மாநாட்டில் தொழிற் சங்க சுதந்திரம், வாழ்க்கை நிலைமைக்கான போராட்டம் பற்றி கீழ்க்கண்ட தீர்மானம் இயற்றப்பட்டது.**

தங்கள் நலனைப்பாதுகாக்கவும், தங்கள் வாழ்க்கைத் தரத்தைப் பாதுகாக்கவும், கடந்த மூன்றாண்டுகளாக வேலை நிறுத்தம் போன்ற போராட்டங்களை நடத்திய இந்திய தொழிலாளி வர்க்கத்தை, இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்சிஸ்ட்) ஒன்பதாவதுமாநாடு வாழ்த்துகிறது.

தொழில் துறையில் ஏற்பட்ட மாற்றத்தினால், தொழிலாளி வர்க்கம் தொழிற்சாலைமூடப்படுதல் கதவடைப்பு, வேலையின்மை அதிகரிப்பு, வேலைப் பாதுகாப்பின்மை, தொடர்ந்து, ஊதியம் குறைவது, தொடர்ந்த வறுமை ஆகியவைகளைத் தாங்கவேண்டியதிருந்தது. இத்தகைய கடினமான காலத்தில். தொழிலாளி வர்க்கம், தங்கள் மத்தியில் ஒற்றுமையை வளர்த்து மாதக்கணக்கில் வேலை நிறுத்தங்கள் சய்து மிகவும் பாதகமானசூழ்நிலையிலும். விலைவாசி உயர்வை எதிர்த்தும்,போனஸ் ஊதிய உயர்வு போன்ற பிரச்னைகளிலும் அவர்கள் பலமுக்கியமான வெற்றியடைந்தார்கள்.

இதில் துர்க்காபூரின் இரும்புத் தொழிலாளர்களும், மேற்கு வங்கத்தின் சணல் தொழிலாளர்களும், கேரளம், மேற்கு வங்கத்தைச்சேர்ந்த தோட்டத் தொழிலாளர்களும், தமிழ்நாட்டின் பஞ்சாலை, சிம்சன் தொழிலாளர்களும், பெற்ற வெற்றிகள் முக்கியத்துவம் வாய்ந்தவை.

ஜனாதிபதி ஆட்சியை நீக்கவும், உண்மையான, நியாயமான தேர்தலை நடத்தவும், வங்கதேசத்தை அங்கீகரித்து, அந்நாசுதந்திர வீரர்களுக்கு ஆயுத உதவி செய்யக்கோரியும். மத்திய, மாநில அரசு ஊழியர்களைப் பழிவாங்குதலை எதிர்த்தும், பல அரசியல் கோரிக்கைகளுக்காக, மேற்கு வங்க தொழிலாளி வர்க்கம் பல பொது வேலை நிறுத்தத்தை நடத்தியது.

அமெரிக்க ஆக்கிரமிப்பை எதிர்த்தும்—சுதந்திரப் போராட்டத்தை நடத்தும் வியட்நாமிய மக்களுக்கு ஆதரவு நல்கியும், திருவனந்தபுரம் மாவட்டத் தொழிலாளி வர்க்கம், முழுமையாக ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்தனர்.

அந்தந் தொழிலாளர்களின், வெற்றிக்காக,ஒற்றுமைக்காக, ஒருமைப்பாட்டிற்காக, ஒன்பதாவது மாநாடு தன்னுடையவாழ்த்துக்களை தெரிவித்து கொள்கிறது.

சி ஐ டி யூ, ஏ ஐ டி யூ சி ஐ என் டி யூ சி எச் எம் எஸ், யு டி யு சி ஆகிய ஸ்தாபனங்களின் தலைமையின்கீழ் வெற்றிகரமாகப் போராட்டங்களை நடத்திய தொழிலாளி வர்க்கத்தை, மாநாடு பாராட்டுகிறது. சி ஐ டி யூமுன்முயற்சியினால் நடத்தப்பட்ட இந்த ஒன்றுபட்ட போராட்டங்கள், தொழிலாளி வர்க்கத்தின் வாழ்வையும், சக்தியையும் அதிகமாக்கியது. இதனால் பயந்த அரசாங்கம், போராட்டகுணமிக்கொண்ட தொழிற்சங்கங்களுக்கு எதிராகவும், தொழிற்சங்க இயக்கத்தில் பிளவு உண்டாக்கவும், ஐ என் டி யூ சி, திரிபுவாதத் தலைமையின் கீழ் செயல்படும் ஏ ஐ டி யூ சி, எச் எம் எஸ் ஆகியவைகளை ஒன்றுபடுத்தவும் முயல்கிறது.

அரசாங்கத்தின்தொழிலாளர் விரோதக் கொள்கைகளுக்கு ஆதரவாக, தொழிலாளர்களைத் திரட்டுவதே, தொழிலாளர் நல அமைச்சரால் இந்த சங்கங்களைக் கொண்டு. ஏற்படுத்தப்பட்ட தேசிய கவுன்சிலின் நோக்கம். இந்த பயங்கரமான. சதியினை முறியடித்து, தங்களைக் காத்துக் கொள்ள வேண்டும் என்று தொழிலாளி வர்க்கத்தை மாநாடு எச்சரிக்கிறது

### அடக்குமுறைக்கு கண்டனம்

தொழிலாளி வர்க்கத்தின் அடிப்படை உரிமைகளைத் தாக்கும்படியான பல மாநிலங்களால் நிறைவேற்றப்பட்ட சட்டங்களை இந்த மாநாடு கண்டிக்கிறது.

தொழிலாளர்களின் வேலை நிறுத்த உரிமைகளைத் தாக்கி, கட்டாய மத்தியஸ்தத்திற்கு விடும் சட்டத்தை இயற்ற சீர்திருத்தவாத தலைமையின் உதவியோடு, மத்திய அரசுமுயல்வதைச் சுட்டிக்காட்டி தொழிலாளர்களை மாநாடு எச்சரிக்கிறது. தொழில் அமைதி என்ற பெயரில் தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் அரசின் எந்த முயற்சியையும், தொழிலாளர்கள், ஒன்றுபட்டு எதிர்ப்பார்கள் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

அம்பர்நாத், நாகபுரி, சென்னை, தோட்டா, ஆகிய இடங்களில் வேலைநிறுத்தத்தின்போது நடந்த துப்பாக்கிச் சூட்டையும், காங்கிரஸ் காங்கிரஸ் அல்லாத அரசுகளின் தொழிலாளர்களுக்கு எதிரான அடக்குமுறையையும், மாநாடு கண்டிக்கிறது.

### அடக்குமுறை

மேற்கு வங்கத்தில் நடக்கும் காங்கிரஸ் ஆட்சியின் அரைப்பாசிச ஆட்சிக்கு எதிராகவும் மேற்கு வங்க தொழிலாளி வர்க்கத்தின் பாதுகாப்பிற்காகவும், இந்திய தொழிற் சங்க இயக்கமும், தொழிலாளி வர்க்கமும் முன்வர வேண்டும் என்று மாநாடு அறைகூவி அழைக்கிறது

பல தொழிற் சங்க தலைவர்கள் கொலை செய்யப்பட்டனர். பலர் போலீசாரின் துப்பாக்கிச் சூட்டில் இறந்தனர். நூற்றுக்கணக்கானவர்கள் சிறையிலிருக்கின்றனர். போலீசாரின் துணையோடு குண்டர்கள் 300க்கும்மேற்பட்ட தொழிற் சங்கங்களைத் தாக்கியும் அவற்றைக் கைப்பற்றியும் உள்ளனர்.

ஆளும்கட்சியின்தொழிற் சங்கத்தில் சேரும்படி தொழிலாளர்கள்பலவந்தப் படுத்தப்படுகிறார்கள், குண்டர்களின், போலீசாரின் வன்முறையால், தொழிற் சங்க நடவடிக்கை நிறுத்தப்பட வேண்டிய திருக்கிறது. பல நூற்றுக் கணக்கான தொழிற்சங்கத் தலைவர்கள், தங்கள் வேலைகளுக்குசெல்லமுடியாதநிலைமை இருக்கிறது,

### உரிமைக்கான போராட்டத்தில் ஒன்றுபடுவீர்

மேற்குவங்கதொழிலாளி வர்க்கத்திற்கு ஆதரவாகவும், அவர்களின்—தொழிற் சங்க உரிமையைப்பெறும போராட்டத்திற்கு ஆதரவாகவும் திரண்டு எழ வேண்டுமென்று தொழிலாளிவர்க்கத்தை மாநாடு கேட்டுக்கொள்கிறது

1) சுதந்திரமான சூழ்நிலையில் ரகசிய ஓட்டெடுப்பின் மூலம், தொழிற்சங்கங்களை அங்கீகரிக்க வேண்டும்.

2) தேவைக்கேற்ற ஊதியம், வார ஊதியமுடக்கம், கதவடைப்பு, லே-ஆப் மில்களை-மூடுதல் தானியங்கும் இயந்திரங்கள், வேலையின்மையை அதிகரிக்கும் முயற்சிகள், தொழிலாளி வர்க்க எதிர்ப்பு சட்டங்கள், ஆகியவற்றை எதிர்க்க, முழு வேலை கிடைக்க, வேலை கிடைக்கும் வரை நிவாரணம் தர,

3) பண வீக்கம். விலைவாசி, அதிக வரி ஆகியவற்றை எதிர்க்க, விலைவாசி புள்ளிக்கு பூரண நிவாரணம் பெற

4) அமெரிக்கக் கடனை ஒத்தி வைத்து, அமெரிக்க நிறுவனங்களை தேசவுடமையாக்க

5) ஏகபோக நிறுவனங்களை தேசஉடமையாக்க

6) ஒரு கட்சி சர்வாதிகாரத்தை நிறுவும் முயற்சியை எதிர்க்க

7) சுதந்திர உரிமைக்காக, தொழிற்சங்க ஒற்றுமைக்காக

ஆகிய கோரிக்கைகளை ஆதரித்து— அவற்றிற்காக, தொழிலாளி வர்க்கத்தின் எல்லாஸ்தாபனங்களையும்— ஒற்றுமைக்கு ஊறு செய்யும் சக்திகளைக் களைந்தெறிந்து, ஒன்றுபட்டு, போராட வாரீர் என்று, ஒன்பதாவது மாநாடு அறைகூவி அழைக்கிறது.

## ஜுலை 12-ல் விவசாயிகள் ஆர்ப்பாட்டம்

### போலீஸ் கொலை வெறியை எதிர்த்து கண்டனம் முழங்குக

★ விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயம் செய்ய

★ 5 ஏக்கர் வரை நிலமுள்ளவர்களுக்கு மின் கட்டணத்தைக் குறைக்க

★ 10 ஏக்கருக்கு குறைவானவர்களுக்கு கடன் நிவாரணம் அளிக்க

— விளைபொருள்களுக்கு விலைப் பாதுகாப்பளிக்க

**அரசு அலுவலகங்கள் முன் ஜுலை 12-ல் ஆர்ப்பாட்டம்**

**விவசாயப் பெருங்குடி மக்களே வீறுகொண்டெழுக**

## கல்கத்தா மாநகராட்சி ஊழியர்கள் ஸ்டிரைக் நோட்டீஸ்

கல்கத்தா, ஜுலை 5—

கல்கத்தா மாநகராட்சி ஊழியர்கள் ஜுலை 20-ம் தேதியிலிருந்து வேலை நிறுத்தம் செய்யப்போவதாக வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுத்துள்ளார்கள் 50-சங்கங்களின் சார்பில் இந்த வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டுள்ளது.

பிப், 17-ம்தேதி செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தை மாநகராட்சி நிர்வாகம் அமுல் நடத்தவில்லை என்றும் 4-மாதங்களாகக் காத்திருந்த பின்னும் நீண்ட நாள் குறைகளை நிவர்த்திக்காமலிருப்பதால் வேலை நிறுத்தத்தில் இறங்குவதைத்தவிர வேறு வழியில்லை என்றும் தொழிற் சங்கங்கள் அறிவித்துள்ளன.

நாட்டின் மற்ற மாநகராட்சிகள் நிதிவசதியைத் தேடி குறைகளைப் போக்கியிருக்கும்போது கல்கத்தா மாநகராட்சி மட்டும் நிதி நிலைமையைக் காட்டி தொழிலாளர்களின் கோரிக்கைகளைத் தட்டிக் கழிக்க முடியாது என்றும் தொழிற்சங்கங்கள் அறிவித்துள்ளன.

தீக்கதிர்

# மிருகத் தனமான அடக்குமுறை

ஜுலை 5-ம் நாள் மிருகத்தனமான போலீஸ் வெறியாட்டம் நிரபராதிகளான 18 உயிர்களை குடித்துள்ளது.

இது போன்ற கொடுமை முன்பு காங்கிரஸ் ஆட்சியில் தான் நடந்தது

நிலச் சுவான்தார்கள் தலைமை வகித்து நடக்கும் இந்தப் போராட்டம்பற்றி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நிலைமை என்ன என்பதை ஏற்கெனவே தெளிவு படுத்தப்பட்டுள்ளது:

எனினும் போலீஸ் அடக்குமுறை மூலந்தான் எதிர் கட்சியினர் நடத்தும் போராட்டங்களை சந்திப்போம் என்று தி. மு, க. ஆட்சியாளர்கள் கூறிடும் பதில் சென்ற கால காங்கிரஸ் பேயாட்சியின் வழியைப் பின்பற்றுவதாகவே உள்ளது.

இந்த மாநிலப் போலீசை மட்டுமல்ல, வெளி மாநிலங்களிலிருந்து மட்டுமல்ல, மத்தியரிசர்வ் போலீசையும் கொண்டு தி மு க ஆட்சி ஒரு இயக்கத்தை அடக்க முன் வந்திருப்பது புதுமையான நிகழ்ச்சி.

மாற்று கட்சியினர் கொள்கைகளை தி மு க ஏற்காமல் இருக்கலாம். அவர்கள் முன் வைக்கும் கோரிக்கைகளையும் ஏற்காமலிருக்கலாம். இப்பொழுது எழுந்துள்ள பிரச்சனை அதுவல்ல. மாறாக, மாற்றுக் கட்சியினர் தலைமை வகித்து, போராட்டங்கள் நடத்தும் ஜனநாயக உரிமை மறுக்கப்படுவதுதான்.

ஆர்ப்பாட்டங்களும், அர்த்தால்களும், மறியல் போராட்டங்களும், வேலைநிறுத்தங்களும் எந்த ஜனநாயக நாட்டிலும் அனுமதிக்கப்படும் ஜனநாயக இயக்க வழிமுறைகளாகும்,

ஆனால் தி மு க ஆட்சியில் இத்தகைய வழிமுறைகளுக்கே இடமில்லை என்று கூறிடும் வகையில் உள்ளது ஜுலை 5-ல் நடந்த போலீஸ் வெறியாட்டம்.

போலீஸ் துப்பாக்கி சூடும், படுகொலைகளும் நடந்தது மட்டுமல்ல — தி மு க உறுப்பினர்களும் தலைவர்களும் ஒவ்வொரு நகரத்திலும் போலீஸ் ஆதரவுடன் வெறியாட்டமே நடத்தியுள்ளனர். கடைகளுக்குள் புகுந்து "நாளைக்கு நீங்கள் கடைகளைத் திறந்து நடத்தவில்லையானால், நாளை மறுநாள் உங்கள் கடைகள் சூறையாடப்படும்" என்று மிரட்டியுள்ளனர். இத்தகைய மிரட்டல்கள் மூலம் — ரவுடியிசத்தின்மூலம் —மாற்றுக் கட்சியினரின் கிளர்ச்சிகளை ஒடுக்கிட முனைவது பாசிஸ்ட்பாணி முறையே தவிர—ஒரு கட்சி சர்வாதிகார வழியே தவிர —ஜனநாயக வழி முறை அல்ல.

சென்ற காலத்தில் தி. மு. க. எதிர்க் கட்சியாக இருந்தபொழுது அர்த்தால்களுக்கும் வேலை நிறுத்தங்களுக்கும் தி. மு. க தலைமைதாங்கி நடத்தவில்லையா?

அன்று காங்கிரஸ் ஆட்சியாளர்கள் கட்டவிழ்த்து விட்ட அடக்குமுறைகளைப்பற்றி தி மு. க, வினர் என்ன கூறினர்கள்? 'ஜனநாயகம் இந்த நாட்டில் அழிந்து விட்டது" என்று கூக்குரலிடவில்லையா? கிளர்ச்சி செய்யும் உரிமையைகூடப் பறித்துவிட்டார்கள் என்று குற்றம் சாட்டவில்லையா?

காங்கிரஸ் ஆட்சியாளர்கள் அன்று நடத்திய துப்பாக்கிப்பிரயோகங்களும், படுகொலைகளும், அக்கிரமங்களும் கொடுமையான ஜனநாயகமான விரோதச் செயல்கள் என்றால் இன்று தி. மு. க. ஆட்சியாளர்கள் புரியும்அதே அக்கிரமங்கள் நியாயமானவை யாகிவிடுமா?

18 உயிர்களைக் குடித்துத்தான் எதிர்க் கட்சியினர் நடத்தும் கிளர்ச்சிகளை ஒடுக்கவேண்டுமா?

ஜனநாயகக் கிளர்ச்சிகளை ஜனநாயக வழிமுறைகளில் சந்திக்கும் துணிவும் ஜனநாயகப் பார்வையும் இல்லாததின் விளைவே இன்று நடந்துள்ள நீசத்தனமான அடக்குமுறை.

இந்தப்போலீஸ் வெறியாட்டத்திற்கு இன்றே முடிவுகாண வேண்டுமென்று கோருகிறோம்.

போலீஸ் வெறியாட்டத்தைப் பற்றி பகிரங்க நீதி விசாரணையை நேர்மையாக நடத்துவதுடன் உயிரிழந்த நிரபராதிகளுக்கு நஷ்டஈடும் வழங்க வேண்டும்.

தி மு. க. ஆட்சியின் இத்தகைய மக்கள் விரோதப்போக்கைத் தடுத்திட ஜனநாயக ஆர்வமுள்ள மக்கள் தம் வலிமை மிக்க குரலை எழுப்ப வேண்டுமென்று வற்புறுத்துகிறோம்.

பாடுபட்டு உழைக்கும் விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் ஜுலை 12-ம் நாள் தமிழகமெங்கும் நடத்தப் போகும் உரிமை முழக்க ஆர்ப்பாட்டங்களை அடக்குமுறை எதிர்ப்பு நாளாகவும் ஆக்கிடுக என வேண்டுகிறோம்.

## உரிமைப் போராட்டங்களுக்குத் தலைமை வகித்து இடது ஜனநாயக சக்திகளின் ஒற்றுமை உருவாக்கிட

# மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வகுத்திட்ட திட்டம்

இன்றைய பொருளாதார நிலையையும், பொதுமக்களின் உணர்வுகளையும், ஆளும் கட்சியின் தந்திரோபாயங்களையும் புரிந்து கொண்டு நமது கட்சி ஒன்றுபட்ட நடவடிக்கைகளை விடாப்பிடியாக மேற்கொள்ள வேண்டும்.

ஒன்றுபட்ட நடவடிக்கையின் மூலம் ஆளும் வர்க்கங்களுக்கு எதிராக ஜனநாயக சக்திகளை திரட்டுவதற்கும் அதன்மூலம் ஜனநாயக இயக்கத்தின் முன்னணித் தளத்தை ஆளும் வர்க்கங்கள் தாக்குவதற்கு திட்டமிட்டுள்ள சதியை முறியடிக்கவும் முடியும். மேற்கு வங்கத்திலும் கேரளத்திலும் இன்றைய தினம் வெகுஜன இயக்கத்துக்கு உள்ள பலமும், மக்களின் அரசியல் உணர்வும் உயர்ந்த மட்டத்தில் இருக்கின்றன என்பதில் கிஞ்சித்தும் ஐயமில்லை.

## உயர்மட்ட அரசியல்

ஆனால் எல்லா மாநிலங்களிலும் வெகுஜனங்கள் தங்களுடைய பொருளாதார அனுபவத்தின் அடிப்படையில் நகர ஆரம்பித்திருப்பதுடன், ஆளுங் கட்சியுடன் ஒட்டி உறவாடுகிறார்கள் இந்தப் பொருளாதாரப் போராட்டங்களில் ஏற்படும் சீருகுலைவுகளும், கலைப்பு வேலைகளும் ஆளும் கட்சியின் பாதுகாப்புக்கு ஆதாரமாக விளங்குகின்றன.

வெகுஜனங்களின் அரசியல் உணர்வை உயர்ந்த மட்டத்துக்குக் கொண்டு சென்றால் தான், இந்தப்போராட்டங்களில் மிகப் பரந்த அளவு ஒற்றுமையையும், சக்திமிக்க ஸ்தாபனத்தையும் கட்ட முடியும். இன்று நம்முன்னால் உள்ள கடமை என்ன? இந்தப் போராட்டங்களை மேலும் மேலும் வளர்த்து, அடிப்படைக் கொள்கைகளையே மாற்றும் அரசியல் போராட்டமாக மாற்றிட வேண்டும். இப்படி அரசியல் மயப்படுத்துவதுதான் நமது கடமை.

## பொருளாதாரப் போராட்டம் மட்டுமல்ல

இந்தப் பொருளாதாரப் போராட்டங்களை நடத்தும் போது, போராட்டத்தின் முன் முயற்சியை ஆளும் கட்சியோ, சீர்திருத்தவாதிகளோ பிடித்துக்கொள்ள அனுமதித்து விடக்கூடாது. தேர்தல் ஆனாலும் சரி, சட்டமன்றப் பிரச்சனைகளாயினும் சரி, நாடாளுமன்றத்தில் அம்பலப்படுத்துவதானாலும் சரி எல்லாவற்றுக்கும் மேலாக மேற்குவங்கத்தில் பயங்கர அடக்குமுறையானாலும் சரி... இவை பற்றிய முனைப்பு எல்லாம் நமது கையில் தான் இருக்கவேண்டும். அரசியல் தலைவனாகவும், போராட்டத்தலைவனாகவும் இது ஒரு நேரடி ஆயுதமாகவே பயன்படும். பொருளாதாரப் பிரச்னைகளிலேயே மூழ்கிக்கிடந்—தால் அரசியல் பிரச்னைகளை புறக்கணித்தால் — அரசியல் போராட்டங்களில் வெகுஜனங்களை இழுக்கத் தவறிவிட்டால்— இவையெல்லாம் ஆளும் வர்க்கங்களுக்கு உதவி செய்வதில்தான் போய்முடியும்.

அதைப் போலவே, நமது கட்சியானது-தொழிலாளி வர்க்க சர்வதேசியத்தை அடிப்படையாகக் கொண்ட கட்சி என்ற முறையில், அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதுவியட்நாம் மக்களின் வீரதீரமிக்க போராட்டத்தை ஆதரிப்பது—பல்வேறு நாடுகளிலும் கம்யூனிஸ்ட் புரட்சிக்காரர்களையும்- தொழிலாளி வர்க்கப் புரட்சிக்காரர்களையும் சித்திரவதை செய்யும் கொடுமைகளை எதிர்ப்பது-சோஷலிஸ்ட் நாட்டு மக்களின் சாதனைகளை மக்கள் மத்தியில் பரப்புவது-ஆகிய பிரச்னைகளை நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

## ஜனநாயக இயக்கங்களுடன் இணைப்பு

நாட்டின் வெகுஜன இயக்கமும், நாட்டு மக்களின் அரசியல் உணர்வின் வளர்ச்சி அளவும் ஏற்றத்தாழ்வாக இருப்பதானது, மேற்கு வங்கத்திலும், கேரளத்திலும் முன்னேறி வளர்ந்துள்ள இயக்கத்தை மிகுந்த கஷ்ட நிலைமையில் வைத்துவிட்டது. நம்முடைய கட்சியால் தலைமை தாங்கப்படும் ஜனநாயக சக்திகளானது, தங்களது பலத்தைக் கட்டிக்காக்க பயனுள்ள நடவடிக்கை எடுத்துக் கொள்வதுடன், இந்த இரண்டு மாநிலங்களிலும் உள்ள முன்னேறி வளர்ந்துள்ள இயக்கங்களுக்கு தீவிர உதவியளிக்கும் நிலைமையில் இருக்கவேண்டும். ஆகையால், எல்லா இடங்களிலும் உள்ள கட்சியானது வளர்ந்துவரும் வெகுஜனப் போராட்டங்களுடன் இணைப்புகள் வைத்திருப்பது மிகமிக முக்கியத்துவமிக்கதாகும்.

அப்போராட்டங்களின் பொருளாதார, அரசியல் பிரச்னைகளில் முன் முயற்சி எடுப்பதுவும் ஸ்தாபன ரீதியில் திரட்டுவதும் ஆன வேலைகளில் இறங்கியுள்ளதால், ஏற்கனவே பொது மக்கள் இயங்கத் தொடங்கி விட்டார்கள்.

## சிவில் உரிமைகள்

கடுமையான அரசியல் நிலைமையைப் பரிசீலனையில் எடுத்துக் கொண்டு கீழ்வரும் கோரிக்கைகளுக்காக ஒன்று படுமாறு மார்க்சிஸ்ட் கட்சி எல்லா ஜனநாயகக் கட்சிகளையும் அறை கூவி அழைக்கிறது.

1) சுதந்திரமான நேர்மையான தேர்தல்கள், ஓட்டளிக்கும் உரிமை உள்ளிட்டு எல்லா அரசியல் சட்ட உரிமைகளையும் உறுதிப்படுத்தி ஒரு கட்சி சர்வாதிகார அபாயத்துக்கு எதிராகப் போராடுதல்.

2) மேற்கு வங்கத்தில் அரைப் பாசிஸ்ட் அடக்குமுறைக்கு முடிவு கட்டி சி. ஆர். பி.யையும், இராணுவத்தையும் திரும்பப் பெறுதல். வெகுஜன ஸ்தாபனங்களைக் கட்டுவதற்கான சுதந்திரத்திற்கும் நேர்மையான சுதந்திரமான தேர்தலுக்கும் சிவில் உரிமைகளை மீண்டும் நிலை நாட்டுதல்.

3) உள்நாட்டுபாதுகாப்பு பராமரிப்புச் சட்டம், வன்முறை செயல்கள் தடுப்புச் சட்டம், தடுப்புக்காவல் சட்டம் போன்ற அடக்குமுறைச் சட்டங்களையெல்லாம் திரும்பபெற்று இந்தச் சட்டங்களின் கீழ் கைது செய்யப் பட்டிருப்பவர்களையெல்லாம் விடுதலை செய்தல்.

## ஒன்றுபட்ட நடவடிக்கை

4) ஆளும் கட்சி அரசியல் சட்டத்தைத் தவறாகப்பயன்படுத்துவதை அகற்றுவதற்கும் ஏகபோக முதலாளிகள்-நிலப்பிரபுக்கள் சுரண்டலை அகற்றுவதற்கும் மாநிலங்களுக்கு உண்மையான உள்ளாட்சி சுதந்திரத்தை உறுதிப்படுத்துவதற்கும், வேலை செய்யும் உரிமையையும் பூரணமான சிவில் உரிமைகளையும் உறுதிப்படுத்துவதற்கும் ஜனாதிபதிக்குள்ள ஏதேச்சாதிகாரமான முறையில் டிஸ்மிஸ் செய்வதற்கான அதிகாரத்தை அகற்றுவதற்கும் அரசியல் சட்டத்தில் அடிப்படை மாறுதல் செய்தல்.

கீழ்க்கண்ட கோரிக்கைகளுக்கு ஆதரவளிக்குமாறும் சாத்தியமான இடங்களில் எல்லாம் ஒன்றுபட்ட நடவடிக்கைகளை உருவாக்குமாறும் எல்லா ஜனநாயக கட்சிகளையும், வெகுஜன ஸ்தாபனங்களையும் கட்சி அறைகூவி அழைக்கிறது.

1) தொழிலாளி வர்க்கத்துக்கு தேவையான அடிப்படை குறைந்த பட்ச சம்பளத்துக்காக, ஊதிய முடக்கத்துக்கும். கதவடைப்புகளுக்கும், லே- ஆப்களுக்கும் ஆலைகளை மூடுவதற்கு எதிராக, மூடப்பட்ட ஆலைகளையெல்லாம் மேற்கொள்ளுவதற்காக மத்திய மாநில அரசு ஊழியர்களுக்கு முழு தொழிற்சங்க உரிமைகளுக்காக. முழு ஜனநாயக உரிமைகளுக்காக. போலீஸ் தணிக்கை முறையை ஒழிப்பதற்காக, தொழிலாளி வர்க்க விரோதச்சட்டங்கள் அனைத்துக்கும் எதிராக முழு வேலை கிடைக்கும் வரை வேலையின்மை நிவாரணத்துக்காக.

## மக்களின் நல்வாழ்வுக்காக

2) பண வீக்கத்துக்கும், விலை ஏற்றத்துக்கும், பற்றாக்குறை பட்ஜெட்டுக்கும், வரிச் சுமைக்கும் குறிப்பாக பொதுமக்கள் மீது மறைமுக வரிச் சுமைக்கும் எதிராக,

3) விவசாயிகளின் நன்மைக்கான முறையில் தீவிர நிலச் சீர்திருத்தத்துக்காக— குறிப்பாக உச்ச வரம்பைக் குறைப்பதற்காக— உழுபவனுக்கு நிலத்தை உறுதிப்படுத்துவதற்காக— நியாயமான கூலிக்காக-விவசாயத் தொழிலாளர்களுக்கு முழு வேலை வாய்ப்புக்காக —கிராமப்புற விவசாயிகளுக்கு இலவச வீட்டு மனைகள் ஒதுக்குவதற்காக. கிராமங்களில் விவசாயிகளுக்கும் மற்ற ஏழை மக்கமக்களுக்கும் கடனை ரத்து செய்வதற்காகக் குறைந்த வட்டியில் கடனுக்காக, விவசாய உற்பத்திப் பொருள்களுக்கு உத்திரவாதப்படுத்தப்பட்ட நியாய விலையும், மார்க்கெட் வசதிகளும் அளிப்பதற்காக, உணவு மற்றும் அத்தியாவசியப் பொருள்களின் மொத்த வியாபாரத்தை அரசே மேற்கொள்வதற்காக,

## அன்னிய நிறுவனங்களை தேசவுடைமை ஆக்குக

4) எல்லா அந்நிய நிறுவனங்களையும் தேசவுடைமையாக்குவதற்காக அந்நியக் கடன்களை நிறுத்தி வைப்பதற்காக, எல்லா இந்திய ஏகபோக நிறுவனங்களையும் தேசியவுடைமையாக்குவதற்காக,

5) எல்லா மாநிலங்களிலும் செகண்டரிக் கட்டம் வரை இலவசக் கல்வியைப் புகுத்துவதற்காக தேவையான மாணவர்களுக்கு ஹாஸ்டல் வசதிகளும் முழு ஸ்காலர்ஷிப் வசதிகளும் அளிப்பதற்காக கல்வி நிறுவனங்களிலும் அமைப்புகளிலும் நிர்வாகத்தில் மாணவர்கள் பங்கு கொள்ளும் உரிமைக்காக— ஷெட்யூல்ட் வகுப்பினருக்கும் பூர்வ குடியினருக்கும் எதிராக அட்டூழியங்கள் செய்பவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுப்பதற்காக, இம்மக்கள் மீது பொருளாதார ரீதியாகவும் சமூகரீதியாகவும் நிலப்பிரபுக்களும், காண்ட்ராக்டர்களும் வர்த்தகர்களும் ஒடுக்குமுறை செய்வதை நிறுத்துவதற்கு உடனடி நடவடிக்கைகள் எடுப்பதற்காக அவர்கள் கைப்பற்றியநிலங்களைத் திரும்ப ஒப்படைப்பதற்காக.

## சிறுபான்மையர் பாதுகாப்பு

—அரசாங்க சர்வீசில் வேலை வாய்ப்பு அளிப்பதிலும் கல்வி நிலையங்களில் சேர்ப்பதிலும் பாரபட்சம் காட்டப்படுவதற்கு எதிராகவும் உருது மொழிக்கு எதிராகப்பாரபட்சம் காட்டப்படுவதற்கு எதிராக. முஸ்லீம் சிறுபான்மை மக்களின் உரிமையைப் பாதுகாப்பதற்காக. இந்து—முஸ்லீம் தேசிய இன வெறியர்கள் பரப்பும் வகுப்புவாத விஷத்தை எதிர்த்துப் போராடுவதற்காக - எல்லா துறைகளிலும் பெண்களுக்கு சம அந்தஸ்தையும் வாய்ப்புகளையும் அளிப்பதற்காக.

கீழ்க்காணும் கோரிக்கைகளுக்காக முற்போக்கான கட்சிகள், தனி நபர்களின் அனுதாபத்தையும் ஆதரவையும், ஒத்துழைப்பையும் கட்சி வரவேற்கிறது.

1) பிரிட்டிஷ் காமன் வெல்த்திலிருந்து துண்டித்துக் கொள்ளவும், உண்மையிலேயே சுதந்திரமானஉண்மையான ஏகாதிபத்திய எதிர்ப்பு, முற்போக்கான, சமாதானம் விரும்பும் கொள்கைக்காகவும்—அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடும் வியட்நாம் மக்களுக்கு எல்லா வகையிலும் ஆதரவு தரவும், தென் வியட்நாம் புரட்சி அரசாங்கத்தை அங்கீகரிக்கவும், சிகனூக் தலைமையிலான கம்போடிய அரசாங்கத்தை அங்கீகரிக்கவும் தென் கொரியாவிலிருந்து அமெரிக்க ஆக்கிரமிப்பு படைகள் வாபஸ் பெறவும், கொரிய மக்களின் அமைதியான ஒற்றுமைக்கும், கொரிய மக்கள் ஜனநாயகக் குடியரசுடன் முழு ஸ்தானிகர் அந்தஸ்துக்கும் சோசலிச கியூபாவுடன் நேச உறவையும் வர்த்தக உறவையும் மீண்டும் ஏற்படுத்திக் கொள்ளவும்,

இனவெறி பீடித்த தென்னாப்பிரிக்க ரொடீசிய போர்த்துகீசு ஏகாதிபத்திய அரசாங்கங்களை எதிர்த்துப் போராடிவரும் ஆப்பிரிக்க மக்களும், லத்தீன் அமெரிக்கா, இதர நாடுகளிலும் விடுதலைக்காகப் போராடிவரும் மக்களுக்கும் ஆதரவு கரம் நீட்டவும்

## அண்டை நாடுகளுடன் நேச உறவு

அண்டை நாடுகளான பங்களாதேசம், பாகிஸ்தான், நேபாளம், இதர நாடுகளுடனும் சகோதர உறவுக்காகவும்,

சீன மக்கள் குடியரசுடன் சகோதர உறவுக்காகவும் சோவியத் யூனியன் இதர சோஷலிஸ நாடுகளுடன் மேலும் நெருக்கமான உறவுக்காகவும்.

உடனடியாக எதிர்காலத்தின் அரசியல் இயக்கத்தின் வளர்ச்சிக்கு இந்த திட்டம் ஆழமான முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்த திட்டத்தைச் சுற்றி நாட்டிலுள்ள எல்லா ஜனநாயக இடதுசாரி சக்திகளையும் திரட்ட சகல முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும் இந்த நாட்டில் தலை தூக்கியிருக்கும் அதி பயங்கர அபாயத்தைஉணர வைக்கவேண்டும் அரசியல் பொருளாதார கலாச்சார வாழ்க்கையின் இதர பிரச்சினைகளில் ஒன்றுபட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

## பல்வேறு இயக்கங்களிலும் தொடர்பு

தொழிலாளர்களையும் விவசாயத் தொழிலாளர்களையும் ஏழை விவசாயிகளையும் அடிப்படையாகக் கொண்டு மாத்திரம் இல்லாமல், நம்முடைய நேச வர்க்கங்களுடனும் பிணைப்பு கொண்டிருக்க வேண்டும். அவர்களையும்சேர்த்துக் கொண்டு நிலப்பிரபுக்களுக்கு எதிராகவும் ஏகபோகங்களுக்கு எதிராகவும், ஏகாதிபத்தியவாதிகளுக்கு எதிராகவும் அவர்களின் கோரிக்கைகளை நாம் எடுத்துக்கொண்டு நடவடிக்கைகளில் இறங்க வேண்டும்; அவர்களையும் கொண்ட முன்னணியும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

நாம் மாணவர்களுடனும் வாலிபர்களுடனும், மாதர்களுடனும், படிப்பாளிகளுடனும் கொண்டிருக்கும் தொடர்புகளை தொடர்ந்து பலப்படுத்திக்கொண்டு, நமது வேலையை விரிவு படுத்த வேண்டும் பல்வேறு அரங்கங்களிலும் பல்வேறு முறைகளிலும் பொது மக்களுடன் நமது கட்சியானது தனது இணைப்புகளை வலுப்படுத்திக் கொள்ளவேண்டும். அப்படிச் செய்தால்தான், ஆளும் கட்சியால் விடப்படும் சவால்களை தக்க முறையில் எதிர்த்துப் போராட முடியும்.

இந்தக் கடமையை நம்பிக்கையுடன் நிறைவேற்ற வேண்டுமானால் - இன்றைய நிலைமையின் தேவைகளுக்கு ஏற்ப சீக்கிரமே நமது பலவீனங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும். இன்று உள்ள நிலைமைக்குப் பொருத்தமான முறையில் இன்றைய நிலைமையின் வளர்ச்சி மட்டத்துக்குஏற்ற முறையில் நாம் ஸ்தாபன ரீதியில் பலமாக இல்லை. கட்சி உறுப்பினர்களின் தன்மையும் உயர்ந்ததாகஇல்லை சித்தாந்தமுறையில் போதிய வளர்ச்சி பெற்றவர்களாகவும் இல்லை இந்த பலவீனங்களையெல்லாம் போக்கி, பெரும் அளவில் பலப்படுத்த வேண்டியிருக்கிறது உண்மையை நோக்குமிடத்து நம்முடைய நடவடிக்கைகள் பலவற்றிலும் செயல்கள் பலவற்றிலும் கடந்த காலத்தியபழையன தான் தொங்கிக் கொண்டிருக்கின்றன.

## சித்தாந்த கல்வி உடனடி கடமை

பின் தங்கிய இந்த நிலைமையைப் போக்கிக் கொள்ள ஒவ்வொரு கட்சி உறுப்பினரும்— கட்சி முழுவதுமே, உணர்வு பூர்வமாக முயற்சித்து சித்தாந்த பூர்வமாக தம்மை வளர்த்துக் கொள்ள வேண்டும். கட்சித் தலைமையானது சித்தாந்தக் கல்விக்கும் அரசியல் கல்விக்கும் ஏற்பாடு செய்வதை உடனடிக் கடமைகளில் ஒன்றாகக் கொள்ள வேண்டும். அதற்கு ஏற்பாடு செய்தால்தான் வெகுஜன இயக்கத்தை சரியான முறையில் தலைமை தாங்கி நடத்த முடியும்.

கட்சியைக் கட்டுவதற்கு ஊழியர்களுக்கு பயிற்சி அளித்திட உத்தரவாதம் செய்வதும் உடனடியான கடமையாகும். இந்த பலவீனங்களைப் பற்றி ஆழ்ந்து பரிசீலிக்க வேண்டியதுகட்சியின் கடமையாகும் இந்த பலவீனங்களைப் போக்காத வரையில், நமது நாட்டின் புரட்சிகர இயக்கத்தில் அபிவிருத்தியே காணமுடியாது என்பதை நமது கட்சி உணரவேண்டும். நமது கட்சி ஊழியர்களும் புரட்சிகரமான தத்துவத்தை உணர்வுபூர்வமாக உணர்ந்து கொள்ளாத வரையில், புரட்சிகரமான நடைமுறையும் இருக்காது என்பதை அறிந்துகொள்ளவேண்டும்.

பலவீனங்களைப் போக்குவோம்! முன்னேறிச்செல்லுவோம்.

## மார்க்சிச — லெனினிசக் கொடியை ஏந்துவோம்

நம்முடைய நாட்டிலே' சரியான மார்க்சிச-லெனினிசப் பாதையை வகுப்பதற்கு நமது கட்சியால் முடிந்திருக்கிறது.

எண்ணிலா இன்னல்களை எதிர்த்து, இந்தப்பாதையில் நடைபோட்டும் வருகிறது. இடதுசாரிகள் ஒருபுறம் தாக்கினாலும்- வலதுசாரிகள் மறுபுறம் தாக்கினாலும்-நாம் நமது கொள்கையில்ஊன்றி நின்று, நமது நாட்டில் நிலவும் துல்லியமான நிலைமைகளுக்கு ஏற்றவாறு, மார்க்சிச— லெனினிசத்தை பிரயோகித்து நமது மக்களுக்கும் நமது வர்க்கத்துக்கு விசுவாசமாகநடந்து கொள்ளுகிறோம். அதோ, அதன் பலன்கள் இருக்கின்றன. அவற்றைப் பாருங்கள்! தொடர்ந்து நாம் தாக்கப்பட்டாலும்கூட-ஆளும்வர்க்கத்துக்கு எதிராக—அதனுடைய தாக்குதல் அத்தனைக்கும் உறுதியாக ஈடு கொடுத்து நிற்கும் ஒரே கட்சி நமது கட்சிதான்! தோளிலே ஏந்திப் பிடித்துக் கொண்டிருக்கும் மார்க்சிச-லெனினிசக்கொடியைத் தூக்கி எறிய மாட்டோம் என மறுத்து—வானளாவ உயர்த்திப் பிடித்துக்கொண்டிருக்கும் ஒரே கட்சி நமது கட்சி ஒன்றேதான்!

(9-வது மாநாட்டின் அரசியல் தீர்மானம்.)

# நிக்சனின் தேர்தல் குழுத் தலைவர் திடீர் ராஜினாமா!

வாஷிங்டன், ஜுலை, 2—

அமெரிக்க ஜனாதிபதி நிக்சனின் தேர்தல் குழுவின் தலைவராக பதவி வகித்து வந்த ஜான் மிச்சேல், தனது பதவியை ராஜினாமா செய்துள்ளார். தன்னுடைய மனைவி மார்த்தா தன்னை விவாகரத்து செய்யப்போவதாக அறிவித்ததினால் இவர் இப்பதவியை ராஜினாமா செய்துள்ளார். மேலும் தன்னுடைய குடும்பகாரணங்களினாலேயே ராஜினாமா செய்வதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால் ஜான்மிச்சேலின் மனைவி பத்திரிகை நிருபர்களிடம், "கடந்த வாரத்தில் நான் அரசியல் கைதியாக"வே நடத்தப்பட்டேன் எனக் கூறியுள்ளார். மேலும், நிக்சனின் தேர்தல் குழுவைச் சேர்ந்த ஐந்து குண்டர்களால் கடுமையாகத் தாக்கப்பட்டதாகவும் தன்னை கீழே தள்ளி ஊசியால் தனது உடம்பை குத்தினார்கள் எனவும், தனது வீட்டு தொலைபேசியின் தொடர்பையும் துண்டித்து விட்டனர் எனவும் கூறியுள்ளார். இந்த அருவருக்கத்தக்க மட்டமான செயல்களுக்குப்பின்தான் தலைவராக இருக்கப்போவதில்லை என அறிவித்துள்ளார்.

# இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர்கள்

பி. சுந்தரய்யா

இ. எம். எஸ். நம்பூதிரிபாட்

பி. டி. ரணதிவே

எம். பசவபுன்னையா

ஜோதிபாசு

பி. ராமமூர்த்தி

ஏ. கே. கோபாலன்

புரமோத்தாஸ் குப்தா

அரிகிஷன் சிங் சுர்ஜித்

# மாதவரம் பால் பண்ணை தொழிலாளர்கள் ஸ்டிரைக் நோட்டீஸ்

சென்னை, ஜுலை. 4—

மாதவரத்தில் இருக்கும் பால் பண்ணைத் தொழிலாளர்கள் தங்களின் கோரிக்கைகளுக்காக வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள்,

1½ ஆண்டுகட்கு முன்னால் அந்தத் தொழிலாளர்கள் கோரிக்கைக்காக நடத்திய வேலை நிறுத்தத்தை உடைப்பதற்கு கைதிகளை உபயோகப் படுத்தினார்கள். அந்த ஸ்டிரைக் சமயத்தில் அமைச்சர் ப. உ சண்முகமும், லேபர் கமிஷனரும் தந்த வாக்குறுதியை இன்னும் நிறைவேற்றவில்லை.

அந்த தொழிலாளர்களின் அடிப்படைச் சம்பளம் இன்றும் ரூ 15 தான். நீண்ட பேச்சுவார்த்தைக்கு பிறகு பேச்சுவார்த்தை பயனளிக்காததால் அவர்கள் இப்போது ஸ்டிரைக் நோட்டீஸ் கொடுத்துள்ளார்கள்.

## தி. மு. க. வன்முறை

அங்கு மிகச் சிறுபான்மையோரைக் கொண்ட தி. மு. க. போட்டி சங்கம் உள்ளது சிம்சன் நிகழ்ச்சியை தொடர்ந்து இப்போது இருக்கும் நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு பால் பண்ணைத் தொழிலாளர்களின் உரிமைப் போராட்டத்தை உடைக்கும் முயற்சியில் இறங்கியுள்ளது.

பால் பண்ணைத் தொழிலாளர் சங்கத்தின் உதவித் தலைவர் இளவழகனை 1—7—72 அன்று திமுக ரவுடிகள் தாக்கி கத்தியால் குத்தி இருக்கின்றனர். சி ஐ டி யூ சங்கத்தில் உறுதியாக இருந்து வேலைசெய்துவரும் தோழர் இளவழகனும், தி மு க வைச் சேர்ந்தவர் தான். அவர் கத்தியால் குத்தப்பட்டதைத் தொடர்ந்து போலீஸ் இது வரை எந்தநடவடிக்கையும் எடுக்கவில்லை.

# விவசாய சங்க ஊழியர் தாக்கப்பட்டார்

# தி. மு. க. வினர் வெறியாட்டம்

ஸ்ரீவைகுண்டம். ஜுலை. 5—

ஸ்ரீவையில் சென்ற சில நாட்களாக நடைபெறும் ரவுடித்தனத்தை கண்டித்து எழுதிவைத்த தட்டிபோர்டுகளை இரவில் எடுத்துச் சென்று ஒடித்து ஆத்துப் பாலத்தின் கீழ் போடப்பட்டிருந்தது.

ஸ்ரீவைகுண்டத்தில், போலீஸ் 144 தடைச் சட்டம் போடப்பட்டு ஊரில் போலீஸ் பந்தோபஸ்து இருக்கும் பொழுதே போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகாமையில் போர்டு எடுத்துச்செல்லப் பட்டு இருக்கிறது, போர்டு வைத்த உடனே போர்டை எடுக்கவேண்டும் என்று ஸ்ரீவைகுண்டப் சப்-இன்ஸ்பெக்டர் சொல்லி அனுப்பினார். போர்டை எடுக்கமுடியாது என்று சொல்லியபின் இரவில் போர்டு அகற்றப்பட்டது.

## பொய்வழக்கு

ஸ்ரீவைகுண்டம் தாலுகா இருங்குளத்தில் கிராம விவசாயிகள் சங்கம் அமைக்கப்பட்டது. இச்சங்கத்தில் முன்பு தி மு க, சங்கத்தில் இருந்த விவசாயிகள் சேர ஆரம்பிக்கவே, தி, மு க.வைச் சேர்ந்தவர்கள் விவசாயிகளை பயமுறுத்தி, இச்சங்கத்தில் சேர்ந்தால் போலீஸ் கைது செய்து சிறையில் போட்டுவிடுவார்கள் என்று மிரட்டினர்மேலும்போலீஸ் உதவியுடன் இச்சங்கத்ததில் சேர்ந்த சில விவசாயிகள் மீது பெட்டிகேசும் போட்டு இருக்கிறார்கள்.

இருங்குளத்தில் தி மு. க. சங்கம் தவிர வேறு சங்கம் வைக்கக்கூடாதுஎன்றும் தி.மு.க. கொடி தவிர வேறுகொடி பறக்கக்கூடாது என்றும் மிரட்டி வந்தார்கள்.

## போலீஸ் மிரட்டல்

3—7—72 இரவில் செய்திங்கநல்லூர் சப்இன்ஸ்பெக்டர் தலைமையில் போலீசார் சென்று விவசாய சங்க செயலாளர் தோழர் ஆறுமுகத்தை வீட்டில் எழுப்பி சுமார் இரண்டு பர்லாங் தூரத்தில நிறுத்தியிருந்த போலீஸ் வானிற்கு கொண்டுவந்து 5—7—72 தேதி நடைபெறும் விவசாயிகள் மறியலில் உங்கள் சங்க உறுப்பினர்களும் கலந்து கொள்ள போவதாகபோலீசுக்குத் தகவல் வந்திருக்கிறது. ஆகவே உங்களையும் சங்கத் தலைவர் சொள்ள முத்துதேவரையும் கைது செய்யப் போவதாகவும் தெரிவித்தார் தோழர் ஆறுமுகம் தங்கள் சங்கம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் இயங்குகிறது என்றும் இப்போது ஏற்பாடு செய்திருக்கும் மறியலுக்கும் எங்களுக்கும் சம்பந்தம் இல்லை என்றும் விளக்கியதின்பேரில் போலீசார் ஆறுமுகத்தை அங்கேயேவிட்டுச் சென்றார்கள்.

## ரௌடிகள் தாக்குதல்

தோழர் ஆறுமுகம் வீட்டிற்குத் திரும்பி வரும் பொழுது, அவரை வழி மறித்து, திருநெல்வேலி மத்திய அலுவலகத்தில் பணிபுரியும், மின் கழகக் கணக்காயர் சங்கத்தைக் சேர்ந்த தி. மு. க வினரும் இன்னும் சிலரும் வழியில் மறித்து நீ எபபடி தி மு. க விற்குப் போட்டியாக சங்கம் அமைத்து வேலை செய்யலாம் என்று வாயில் வந்தபடி பேசி அவரை கன்னத்திலும் முகத்திலும் அடித்து கீழே தள்ளி காலால் உதைத்து இனி சங்க வேலை செய்தால் உயிர் உன்னுடையதல்ல என்று எச்சரித்துச் சென்று இருக்கிறார்கள்.

இச்சம்பவம்பற்றி போலீசில் ரிப்போர்ட் கொடுக்கப் பட்டிருக்கிறது ஜனநாயகம் பேசும் தி மு க. ஆட்சியில் சங்கம் வைத்தால் தாக்குகிறார்கள் இவர்கள் தான் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு பேசுகிறார்கள். தங்களுக்கு மக்களிடம் செல்வாக்குக் குறையவே ரவுடித்தனத்தில் இறங்க ஆரம்பித்திருக்கிறார்கள்

—ந நி

# வேலை வாய்ப்பு அவசரத் திட்டம் செயல்பட்டது எப்படி?

புதுடெல்லி, ஜுலை, 7—

1971-ம் ஆண்டு நாடாளுமன்றத் தேர்தலுக்குப் பின் காங்கிரஸ்அரசாங்கம் பகட்டாக ஒரு திட்டத்தை அறிவித்தது. கிராமப் புறத்தில் வேலையின்மையைப் போக்கப் போவதாகவும் அதற்காக அவசரச் சட்டம் தீட்டியிருப்பதாகவும் அறிவிக்கப் பட்டது.

இந்திரா காந்தியின் பாசறையிலுள்ள வறுமை ஒழிப்பு ஆயுதம் இது என்றும் சித்தரித்துக் காட்டப் பட்டது.

ஆனால் அவசரத் திட்டம் ஓராண்டு அமுலாகியிருக்கும் விதத்தைப் பார்த்தால் இந்தத்திட்டம் படுத்துவிட்டது தெரியவரும்.

1971-72-ம் ஆண்டு மத்திய அரசின் பட்ஜெட்டில் இத்திட்டத்துக்காக ரூ 50 கோடி ஒதுக்கப்பட்டிருந்தது. இத்தொகையில் மாநில அரசுகளுக்குக் கொடுக்கப்பட்டதே ரூ 34·04 கோடிதான். அதிலும் கடைசியாகக் கிடைத்திருக்கும் தகவலின்படி மாநில அரசுகள் செலவிட்டிருக்கும் தொகை ரூ 13.34 கோடி. இத்தொகையை அவைகள் எப்படிச் செலவிட்டிருக்கின்றன.

இத்திட்டத்தில் மேற்கு வங்கத்துக்கு ஒதுக்கப்பட்டது ரூ. 299 லட்சமாகும். அதில் கொடுக்கப்பட்டது ரூ 116 லட்சமாகும். இதில் மாநில நிர்வாகம் செலவிட்டது ரூ 15·6 லட்சம்தான் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்டதில் எவ்வளவு தொகை செலவிடப்படவில்லை என்பதைக் கீழ்வரும் பட்டியல் காட்டுகிறது:—

### கிராமப்புற வேலை வாய்ப்பு அவசரத் திட்டம் 1971—72

| மாநிலம் | ஒதுக்கீடு | விடுவிக்கப் பட்டதொகை | செலவிடப்பட்ட தொகை |
|---|---|---|---|
| | | (ரூபாய் லட்சங்களில்) | |
| ம. பி. | 537 | 268·72 | 14·93 |
| மகாராஷ்டிரா | 325 | 121·87 | 48·71 |
| ஒரிசா | 183 | 126·87 | 15·47 |
| பஞ்சாப் | 137·50 | 137·16 | 15·12 |
| உ. பி. | 679 | 675 | 295·86 |
| திரிபுரா | 37·50 | 4·98 | 1·20 |
| தமிழ்நாடு | 265·50 | 260·69 | 220·60 |
| மைசூர் | 237·50 | 178·12 | 86·78 |
| பீகார் | 458 | 228·95 | 162·64 |

மாநிலங்களிடம் துல்லியமாக இன்னும் எவ்வளவு தொகை செலவிடப்படாமல் இருக்கிறது என்றும். ஏன் செலவிடப்படாமலிருக்கிறது என்றும் மத்திய அரசு இன்னும் தகவல் வெளியிடவில்லை.

'—பெசன்ட் அன்ட்லேபர்' மாத இதழிலிருந்து

# அபலைப் பெண் மீட்கப்பட்டாள்

கம்பம், ஜுலை. 4—

வீட்டில் வேலை செய்து பிழைப்பதற்கு வந்த பெண்ணை விபசாரத்தில் ஈடுபடுத்த முயற்சித்த சம்பவம்ஒன்று இங்கு நிகழ்ந்துள்ளது.அந்தஅபலைப்பெண்ணை மார்க்சிஸ்ட்கட்சித் தோழர்கள் மீட்டு, தகப்பனாரிடம் ஒப்படைத்தனர்.

கேரள மாநிலம் கோட்டயம் மாவட்டம் சேனைப் பாடியைச் சேர்ந்த கே. நாராயணநாயர் என்பவரின் மகள் கனகவல்லி.

அந்தப் பெண் கம்பத்தில் ஒரு பெரிய மனிதன் என்று கூறப்படுபவரின் வீட்டு வேலைசெய்வதற்குஅனுப்பி வைக்கப்பட்டாள்.

வேலைக்கு வந்த அந்த 14 வயது பெண் விபசார விடுதி ஒன்றில் சேர்க்கப்பட்டாளாம்.

அங்கு கற்பைக் காத்துக் கொள்ள கனகவல்லி போராடி இருக்கிறாள். போலீஸ்காரர் ஒருவரும், மற்றும் சிலரும் தகாத முறையில் நடக்க முயற்சித்த போது கனகவல்லி கூச்சல் போட்டதால் அவர்கள் போய் விட்டனர்.

இந்தச் சம்பவம் வெளியிலதெரிந்ததும்,கம்பம்நகர் மன்ற உறுப்பினரும், மார்க்சிஸ்ட் கட்சி கிளை செயலாளருமான தோழர்கே நாச்சி வேலுவும் மற்றும் சில தோழர்களும் கனகவல்லியை மீட்டுக் கொண்டு வந்தனர்.

கடந்த ஜுன் 6-ம் தேதி பெண்ணின் தந்தைக்கு தந்தி கொடுத்து வரவழைக்கப்பட்டு அவரிடம் பெண் ஒப்புவிக்கப்பட்டாள்.

எங்காவது வேலை செய்து சாப்பிடட்டும் என்ற நோக்கத்தில் அனுப்பப்பட்ட தம்முடைய பெண்ணுக்கு நேரவிருந்த அபாயத்திலிருந்து அவளை மீட்டதற்காக நாராயணநாயர் மார்க்சிஸ்ட்கட்சி தோழர்களுக்கு நன்றி தெரிவித்தார் ஊர் திரும்புவதற்குப் பணம் இல்லாததால் ரூ 45 வசூலித்து நாராயணநாயரிடம் கொடுக்கப்பட்டது.

# பங்களாதேஷ் விவசாயிகள் மாநாடு

## மௌலானு பாஷானி திறப்புரை

வீரஞ்செறிந்த விடுதலைப் போராட்டத்தில், வெற்றி வாகைசூடிய பங்களாதேஷ் விவசாயி மக்கள், தங்களுடைய சொந்த வர்க்க ஸ்தாபனங்களைக் கட்டுவதில் உற்சாகமுடன் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்கள் தங்களின் அருமைத் தலைவரும், 80வயதுக்கும்மேலான முதுபெரும் தலைவருமான மௌலானு அப்துல் ஹமீத் கான் பாஷானிதலைமையில் ஆர்கனைசிங்கமிட்டி அமைத்திருக்கிறார்கள்.

பங்களாதேஷ் கிருஷிக் சமிதியின் கிழக்கு மண்டல மாநாடு, கடந்த ஏப்ரல் 29, 30 தேதிகளில் நடைபெற்றது. இந்த கிழக்கு மண்டலத்தில் 10 மாவட்டங்களே உள்ளன என்றாலும், பங்களாதேஷின் அனைத்து மாவட்டங்களிலிருந்தும் பிரநிதிகள் கலந்து கொண்டார்கள். இந்த மாநாட்டில் 7000பிரதிநிதிகள் கலந்துகொண்டார்கள் இப்பிரதிநிதிகள் கூட்டத்துக்கு மௌலானு பாஸானி தலைமை வகித்தார்.

### வாழ்த்துக்கள்

இம்மாநாட்டை வாழ்த்தி தென் வியட்னும் விவசாயிகள் சங்கமும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் முஜாபர் அஹமதும், அகில இந்திய விவசாயிகள் சங்க பொதுச் செயலாளர் தோழர் ஹரி கிருஷ்ணக்கோனாரும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தார்கள்.

### தியாகபூமி

மாநாடு, டாக்கா நகருக்கு 40 மைல் தொலைவிலுள்ள சிப்பூர் கிராமத்தில் நடந்தது. இங்கள் கிராமமும் இதைச் சுற்றியுள்ள கிராமங்களும் 1968 முதலே பாகிஸ்தானின் இராணுவ ஆட்சியை எதிர்த்து வீரதீரமுடன் போராடியிருக்கின்றன. ஆஜ் துல்மான் பாஸ்லு, மாணிக் இட்ரிஸ் முதலியவர்களும் இன்னும் அநேக விவசாயிகளும் இராணுவ வெறியர்களால் இங்கு சுட்டுக்கொல்லப்பட்டார்கள். அவர்களின் ஜீவஇரத்தத்தால் புனிதம்பெற்ற தியாக பூமி இது.

### கலந்து கொண்டோர்

மாநாட்டில், இடதுசாரிகள் அனைவரும் கலந்து கொண்டனர். மௌலானு பாஷானியின் தேசிய அவாமி கட்சியினரும் கலந்து கொண்டார்கள். மற்றும், நாடு பிரிவினை ஆகும் முன்னர் இருந்த தேசிய முஸ்லீம்களும் கலந்து கொண்டார்கள்.

மோனிசிங் குழுவைச் சேர்ந்த பங்களாதேஷ் கம்யூனிஸ்ட் கட்சியினர், ஏற்கெனவே தனியாக நடத்தினார்கள். ஆனால் அந்த மாநாட்டுப் பேரணியில் 500 பேர் கூட கலந்து கொள்ளவில்லை.

இந்த மோனிசிங் கூட்டத்தார், விவசாய இயக்கத்தில் செய்துவரும் சீர்குலைவு வேலைகளை முறியடிப்பதென, சகல இடதுசாரிகளும் முடிவெடுத்தார்கள்.

இந்த மோனிசிங் கூட்டத்துக்கு முன்பிருந்த கொஞ்சநஞ்ச செல்வாக்கும்வெகுவேகமாககரைந்து வருகிறது.

### கன்வீனர் அறிக்கை

மாநாட்டின் அமைப்பாளரான அப்துல் மன்னன் பூலியா அறிக்கை சமர்ப்பித்தார். அந்த அறிக்கையில், மொழிப் போராட்டத்திலிருந்து விடுதலைப் போராட்டம் வரையிலும் வங்காளதேச விவசாயிகள் நடத்திய வீரசாகசங்களை வெகுவாகப் பாராட்டியது.

பின்னர் நில உறவுகள் பற்றி அறிக்கை விபரமாக கூறியது; அதாவது:—

வங்காள தேசின் கிராமப்புற ஜனத்தொகையில் 100-க்கு 2 பேர்களேயுள்ள பண்ணையார்கள் (ஜோட்தார்கள்) கையில் மொத்தச்சாகுபடியில் உள்ள நிலத்தில் கால் பங்கு நிலம் இருக்கிறது. 80 சத விகித விவசாயிகளுக்கு நிலமே இல்லை விவசாயிகளுக்குச் சொந்தமாக 9½ சதவிகித நிலம்தான் இருக்கிறது சாகுபடி நிலத்தில் 37 சத விகித நிலம் குத்தகைக்கு விடப்பட்டிருக்கிறது. இந்தப் புள்ளி விபரம், முன்னைய பாகிஸ்தான் சர்க்கார் எடுத்த புள்ளி விபரமாகும்.

இந்த அறிக்கையின்படி, பங்களாதேஷ் விவசாயிகளில் 89 சதம்பேர் நேரடியாக லேவாதேவிக்காரர்களிடம் சிக்கி கடுமையாகச் சுரண்டப்படுகிறார்கள். எத்தனையோ நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் இதற்கு முன்னால் வந்திருந்தும்கூட, விவசாயிகளின் நிலைமையை சிறிதுகூட உயர்த்தவில்லை.

### சங்கம் அமைப்போம்

சங்க அமைப்பு பற்றியும் அறிக்கையில் சரியான விளக்கம் இருந்தது. அதாவது நிலமற்றவிவசாயிகளையும் சிறுநில ஏழை விவசாயிகளையும் அடிப்படையாக கொண்டு, நடுத்தர விவசாயிகளுடன் ஐக்கியம் ஏற்படுத்திக் கொண்டும் உள்ள ஸ்தாபனங்களை அமைத்திட வேண்டும் அனைத்து விவசாயிகளையும் ஒன்றிணைக்கக்கூடிய முறையில் ஸ்தாபனம் இருக்க வேண்டும்.

### அரசின் போக்கு

இப்பொழுது உள்ள முஜிபிர்ரஹ்மான்சர்க்காரானது விவசாயிகளுக்குக் கொடுக்க வேண்டிய நிவாரணங்களை தமது அவாமிலீக் கட்சியின் பேரால், தமது எம். எல். ஏ.கள் மூலமாகத்தான் செய்கிறது.

### விமர்சனம்

வந்திருந்த பிரதிநிதிகள், கடந்த காலத்தில் விவசாய இயக்கத்தின் பலவீனங்களை சுட்டிக்காட்டினார்கள்.

அது எவ்வாறு இயக்க முன்னேற்றத்துக்கு ஊறு விளைவித்து வந்தது என்பது பற்றியும் விளக்கினார்கள். இப்பொழுது பரவலாக விவசாய இயக்கம் வளருவதற்கான எழுச்சி ஏற்பட்டிருப்பதாகவும் பிரதிநிதிகள் கூறினார்கள். நாட்டின் சுதந்திரத்தைப் பலப்படுத்தவும், நாட்டைச் சீரமைக்கவும் பரந்த அளவில் இயக்கத்தை வளர்ப்பதெனவும் உறுதி எடுத்துக் கொண்டார்கள்.

### பொதுக்கூட்டம்

மாநாட்டு முடிவில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் 1 லட்சத்துக்கு மேற்பட்டோர் கலந்து கொண்டார்கள். சுற்றுவட்டாரத்திலிருந்து 30, 40 மைல்தொலைவிலிருந்துகூட ஊர்வலமாக நடந்து இக் கூட்டத்திற்கு வந்தார்கள்.

### பாஷானி பேச்சு

மௌலானு பாஷானி அரசியல் சட்டம் எப்படி இருக்க வேண்டுமென்பது பற்றி பேசினார்.

பாகிஸ்தான் படைகளுடன் சேர்ந்து கொண்ட நிலப்பிரபுக்களுக்கும் ஜமீன்தார்களுக்கும், லேவாதேவிகளுக்கும், கள்ளமார்க்கெட்காரர்களுக்கும், கொலைகாரர்களுக்கும், கூட்டாளிகளுக்கும் அரசியல் சட்டத்தில் ஓட்டுரிமை வழங்கக் கூடாது என்றார்.

மக்கள் தொகையில் 95 சத விகிதம் விவசாயிகளாகவும் தொழிலாளர்களாகவும் இருப்பதால், அவர்களுக்கு நாடாளுமன்றத்தில் கூடுதல் ஸ்தானங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்றார்.

பேச்சுரிமை, சங்கம் சேரும் உரிமை, பத்திரிகை நடத்தும்உரிமை, முதலான உரிமைகள் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றார்.

### வியட்னாமுடன் உறவு

இறுதியாக ஆசிய, ஆப்பிரிக்க நாட்டு மக்களுடனும், சிறப்பாக வீரமிக்க வியட்னும் மக்களுடனும் ஒன்றுபட்டு நிற்கவேண்டுமென்று பாஷானி வற்புறுத்தினார் பங்களாதேஷ் சுதந்திரப் போராட்டத்துக்கு உதவிய இந்திய மக்களுக்கு நன்றி செலுத்தினர்.

இந்த மாநாட்டு ஊர்வலத்தில், அருகிலுள்ள டான்ஜி என்ற நகரிலிருந்து 10 ஆயிரம் தொழிலாளர்கள் ஊர்வலமாக வந்து கலந்து கொண்டார்கள்.

குறிப்பு:

பெசன்ட் அண்டு லேபர் என்ற ஆங்கில மாத இதழிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது இந்தஇதழ்தோழர் ஹரிகிஷன்சிங்சுர்ஜித் அவர்களை ஆசிரியராகக் கொண்டு அகில இந்திய விவசாய சங்கத்தால் வெளியிடப்படுகிறது. இதன் முகவரி; 4, அசோக்ரோடு புதுடில்லி.

---

## யுத்த வரைமுறை.....

(7-ஆம் பத்தி தொடர்ச்சி)

லிருந்து பார்த்தால், இந்த விஷயம் உண்மையிலேயே மிகவும் பயங்கரமாகவும் உள்ளது. வியத்நாம் போர் இந்தப் பூவுலகில் இதுவரையில் நடக்க த படு நீசத்தனமான, கொடுமையிலும் கொடுமையான யுத்தமே யாகும். ஒரு நாட்டின் மீது போர்ப் பிரகடனம் கூடச் செய்யாமல், சம்பிரதாயமான போர்களில் பயன்படுத்தப்படாத மிகவும் நாசகரமான நச்சுக்கருவிகளையெல்லாம் பயன்படுத்தி, வியத்நாமின் பயிர் பச்சைகள், கன்றுகாலிகள், மக்கள் எல்லாவற்றையும் பூண்டோடு ஒழித்துக்கட்டும் யுத்தம் அமெரிக்கா நடத்தி வருவதால்தான் இந்த யுத்தம் படுநீசத்தனமானதாக, கொடுமையிலும் கொடுமையானதாக உள்ளது.

மேலும் அமெரிக்கர்கள் அங்கு யுத்தங்கள் நடத்தி வந்தபோதிலும், பேரிட்டு வந்தபோதிலும், சட்ட வியாக்கியானப்படி அவர்கள் வெறும் ''ஆலோசகர்களாக'' த்தான் கருதப்படுகிறார்கள். எனவே இது பிரகடனப்படுத்தப்படாத யுத்தமாக நடந்துவருகிறதென்று நாம் கூறுகிறோம். இது வே மிகவும் நீசத்தனமான யுத்தமாகும்.

அமெரிக்க அரசாங்கம் பிரகடனப்படுத்தாத யுத்தத்தை நடத்திவரும் போது, அமெரிக்கஜெனரல்களும் தனிப்பட்ட யுத்தங்களை நடத்திவருகின்றனர், இது நிலைமையை மேலும் கேவலமாக்கி வருகிறது. இந்த யுத்தமே சட்டவிரோதமானது; மனிதத் தன்மை அற்றது. அமெரிக்க ஜெனரல்களோ இதனை மேலும் சட்டவிரோதமானதாக, மேலும் மனிதத் தன்மையற்றதாக ஆக்கி வருகின்றனர். மேலும் சிவிலியன் அதிகாரிகளின் உத்தரவுகள் அமெரிக்க ஜெனரல்களைத் தொடமுடிவதில்லை. அவர்கள் அதனைத் துச்சமாக மதித்துத் தூக்கியெறிகின்றனர். குற்றவாளியைத் தண்டிக்க காங்கிரசே நடவடிக்கை எடுக்க வேண்டியுள்ளது.

செனேட்டர் வில்லியம் பிராக்ஸிமைர் சொல்வது போல், லாவெல் செய்த காரியம் ''சிவிலியன்கட்டுப்பாட்டை வேண்டுமென்றே மீறிய செயலேயாகும்''.

இத்தகைய செயல்களைத் தடுக்காவிட்டால், அமெரிக்க ராணுவத் தலைமையகமான பென்டகனே ஜனாதிபதியின் வெள்ளை மாளிகையில் வந்து வீற்றிருக்கக்கூடிய நாளும், இன்னது செய்ய வேண்டும், இன்னது செய்யக்கூடாது என்று ஜனாதிபதி பென்டகனுக்கு உத்தரவிடுவது போய், ஜனாதிபதிக்குப் பென்டகன் ஆணையிடுகின்ற நாளும் வரக்கூடிய காலம் வெகு தூரத்தில் இல்லை என்றே சொல்லிவிடலாம்.

---

# மார்க்சிஸ்ட் கட்சியின் 9-வது மாநாட்டிற்கு தோழமைக் கட்சிகளின் வாழ்த்துக்கள்

மதுரை, ஜுலை. 7—

**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்)யின் 9-வது அகில இந்திய மாநாடு மதுரை வெண்மணிநகரில் நடைபெற்றதை வாழ்த்தி கொரியா, கியூபா, ருமேனியா கம்யூனிஸ்ட் கட்சிகள் வாழ்த்துத் தந்திகள் அனுப்பின. அந்தத் தந்திகளையும், நன்றி தெரிவித்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) அனுப்பிய செய்திகளையும் இங்கு தருகிறோம்.**

## கொரிய தொழிலாளர் கட்சி வாழ்த்து

கொரிய தொழிலாளர் கட்சியின் மத்திய குழு, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் 9-வது மாநாட்டை பாராட்டுகிறது. இதன் மூலம் உங்கள் கட்சியின் எல்லா உறுப்பினர்களுக்கும், இந்திய தொழிலாளி வர்க்கத்திற்கும் தனது சகோதர வாழ்த்துக்களை தெரிவிக்கிறது

அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கெதிராகவும், உள்நாட்டு பிற்போக்காளர்களுக்கெதிராகவும், உள் நாட்டு ஜனநாயக வளர்ச்சிக்காகவும், தொழிலாளி வர்க்கத்தின் நன்மைக்காகவும் உங்கள் கட்சியும், இந்திய தொழிலாளி வர்க்கமும் நடத்தும் போராட்டத்தில் உங்கள் கட்சி அரிய பணியாற்றும் என்று நாங்கள் நம்புகிறோம்.

மக்கள் ஜனநாயக புரட்சிகர நிலையை அடைவதற்கு மிகவும் கஷ்டமான நிலையில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) உறுதியாகப் போராடிக் கொண்டிருக்கிறது. இந்தப் போராட்டத்தில் உழைக்கும் மக்களின் பேராதரவை அது மென் மேலும் பெற்று வருகிறது. இந்த சந்தர்ப்பத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் தலைமையில் அமைந்த ஆக்கிரமிப்பு யுத்தக் கொள்கையை எதிர்த்து நடைபெறும் போராட்டத்திலும், நாட்டின் பூரண சுதந்திரத்திற்கான போராட்டத்திலும் தொழிலாளி வர்க்கத்தின் வரலாற்று ரீதியான லட்சியத்திற்கான போராட்டத்திலும் உங்கள் கட்சிக்கும் இந்திய தொழிலாளி வர்க்கத்திற்கும் எங்களுடைய ஒருமைப் பாட்டினை தெரிவித்துக்கொள்கிறோம். நம்மிரு கட்சிகளிடையே ஏற்பட்டுள்ளநட்புறவும் ஒத்துழைப்பும் மார்க்சிய— லெனினிசத்தின் அடிப்படையிலும், பாட்டாளி வர்க்க சர்வதேசியத்தின் அடிப்படையிலும் மேலும் பலப்பட்டு வளரும் என்று நம்புகிறோம். இம் மாநாடு அந்தப் பணிகளில் வெற்றி பெற மனமார்ந்த வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறோம்.

## ருமேனிய கம்யூனிஸ்ட் கட்சி வாழ்த்து

அமைதிக்காகவும், சர்வதேசிய பாதுகாப்பிற்காகவும்—ஏகாதிபத்திய வட்டாரங்களையும், பிற்போக்காளர்களின் கொள்கைகளையும் எதிர்த்தும்—பாடுபடும் இந்திய பாட்டாளிவர்க்கத்தின் அடிப்படை நலன்களையும் உரிமைகளையும் காப்பதற்காகவும் நடைபெறும் போராட்டத்தில் பல புதிய வெற்றிகளை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் 9-வது மாநாட்டில் கலந்து கொள்வோருக்கும், கட்சி உறுப்பினர்களுக்கும் ருமேனிய கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய குழு தனது இதயபூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது.

இந்த மாநாட்டின்போது நமது இரு கட்சிகளுக்கிடையேயுள்ள தோழமையுணர்வும், நட்புணர்வும், சர்வதேசிய ஒற்றுமையும் மேலும் உறுதிப்பட வலியுறுத்துகிறோம். அதே சமயத்தில் மார்க்சிச—லெனினிசத்தின் அடிப்படையில்— பாட்டாளி வர்க்க சர்வதேசியத்தின் அடிப்படையில்— நமது இரு நாட்டு மக்களிடையே உள்ள நட்புணர்வு பலப்படுவதின் அடிப்படையில்—கம்யூனிஸ்ட்கள் தொழிலாளர் கட்சிகளது ஒற்றுமையின், அடிப்படையில் உலகின் எல்லா புரட்சிகர ஏகாதிபத்திய எதிர்ப்பு சக்திகளது ஒற்றுமையின் அடிப்படையில் அது மேலும் தழைத்தோங்கும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் 9-வது மாநாட்டு நிகழ்ச்சிகள் வெற்றிபெற நாங்கள் உள்ளன்போடு வாழ்த்துகிறோம்.

## கியூபா கம்யூனிஸ்ட் கட்சி வாழ்த்து

உங்கள் கட்சியின் 9-வது மாநாட்டின்போது-கியூபா கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தோழமையுடன் எங்களது வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறோம்.

உங்கள் கட்சியின் 9-வது மாநாட்டின் பணிகளும், லட்சியங்களும் வெற்றிபெற, உங்கள் கட்சியின் நியாயபூர்வமான விருப்பங்களை அடைவதில் வெற்றிபெற வாழ்த்துவதற்கு இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொள்கிறோம்.

## மார்க்சிஸ்ட் கட்சியின் நன்றிச் செய்திகள்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் 9-வது மாநாடு, நமது கட்சியின் தலைமையில் நடக்கும் மக்கள் இயக்கத்தின் வெற்றிக்கும், கட்சியின் மாநாட்டின் வெற்றிக்கும் தனதுசகோதரத்துவ ஒருமைப்பாட்டை தெரிவித்துள்ள கொரிய தொழிலாளர் கட்சிக்கு தனதுநன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

அமைதியான முறையில் கொரிய நாடு ஒன்றுபட கொரிய ஜனநாயகக் குடியரசு 1971-ம் ஆண்டு ஏப்ரல் 12-ம் தேதி முன்வைத்த எட்டு அம்ச திட்டத்தையும், அமெரிக்க ஆக்கிரமிப்பு படைகள் தென் கொரியாவிலிருந்து வாபஸ் பெறவேண்டும் என்ற கோரிக்கையையும் இம்மாநாடு முழுமையாக ஆதரிக்கிறது.

இந்திய கம்யூனிஸ்ட்களாகிய நாங்கள் எங்களின் சர்வதேசிய கடமையாக அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்தும், கொரியாவின் மீது மற்றொரு ஆக்கிரமிப்பு யுத்தத்தை தொடுப்பதற்கு ஜப்பானிய ஏகாதிபத்தியத்தின் ஆத்திரமூட்டுதல்களை எதிர்த்தும் எங்களால் இயன்றவரை மக்களை திரட்டுவோம் என்று இம்மாநாடு கொரிய தொழிலாளர் கட்சிக்கும் கொரிய மக்களுக்கும் உறுதி கூறிக் கொள்கிறது.

கொரியநாடு ஒன்றுபடுவதற்கான போராட்டத்தில் கொரிய தொழிலாளர்கட்சி வெற்றிபெற இம்மாநாடு வாழ்த்துகிறது. அமெரிக்க, ஜப்பானிய ஏகாதிபத்திய வாதிகளுக்கெதிராகவும், சோசலிச நிர்மாணத்திலும் வெற்றிபெற இம்மாநாடு வாழ்த்துகிறது.

## கியூபா கம்யூனிஸ்ட் கட்சிக்கு

எங்கள் கட்சி தலைமை தாங்கி நடத்தும் இயக்கத்திற்கு மாநாடு வெற்றி பெறவும் தோழமை ஒருமைப்பாட்டுடன் வாழ்த்திய கியூபா கம்யூனிஸ்ட் கட்சிக்கு இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் 9 வது மாநாடு தனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறது.

அமெரிக்காவின் வாயிலில், சோசலிச முகாமின் மேற்கெல்லையில் அமைந்திருக்கும் சோசலிச கியூபா அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்து கடும் யுத்தத்தை நடத்திக் கொண்டிருக்கிறது பாட்டாளிவர்க்க சர்வதேசியத்தின் நல்ல பாரம்பரியத்திற்கேற்ப தேசிய விடுதலை இயக்கங்களுக்கு உணர்வூட்டிக் கொண்டிருக்கிறது குறிப்பாக லத்தீன் அமெரிக்க நாடுகளின் விடுதலை இயக்கங்களுக்கு உதவிக்கொண்டுமிருக்கிறது.

அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்த போராட்டத்தில் மேலும் வெற்றிபெறவும், கியூபாவில் சோசலிச நிர்மாணத்தை கட்டுவதிலும் கியூபா கம்யூனிஸ்ட் கட்சியும், கியூபா மக்களும் மேலும் பல வெற்றிகளைப்பெற இம்மாநாடு வாழ்த்துகிறது.

## ருமேனியா கம்யூனிஸ்ட் கட்சிக்கு

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் 9 வது மாநாடு ருமேனிய கம்யூனிஸ்ட் கட்சி தோழமை ஒருமைப்பாட்டுடன் மாநாடு வாழ்த்துப்பெற அனுப்பிய தந்திக்கு தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

சோசலிசத்தைக் கட்டுவதில் ருமேனிய மக்களும் மேலும் பல வெற்றிகளைப்பெற இம்மாநாடு வாழ்த்துகிறது.

---

# யுத்த வரைமுறைகளை மீறி அமெரிக்கத் தளபதிகள் புரியும் தனியார் அட்டூழியங்கள்

ஹனோய் ஜுலை. 7—

ஜான் டி. லாவெல் என்பவர் ஓர் ஓய்வுபெற்ற அமெரிக்க ஜெனரல். ஓய்வு பெறும் வயது வருமுன்பே அவருக்கு ஏன் ஓய்வளிக்கப்பட்டது, நான்கு நட்சத்திரப் பட்டை கொண்ட அந்த ஜெனரலை, ஓய்வளிக்கப்பட்ட சமயத்தில் மூன்று நட்சத்திரப் பட்டை கொண்ட ஜெனரலாகப் பதவிக் குறைப்பு செய்தது ஏன் என்பதெல்லாம் அமெரிக்க ராணுவத் தலைமையகத்தின் மேலிடத்துப் பிரமுகர்கள் மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்த பரம ரகசியங்களாகும். ஆயினும் இந்த ரகசியத்தையெல்லாம் நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையைச் சேர்ந்த செய்மோர் ஹெர்ஷ் அம்பலப்படுத்திவிட்டார். அவர் வெளியிட்டுள்ள தகவல் திடுக்கிட வைப்பவை; மற்றொரு மைலாய் படுகொலை பற்றிய உண்மையை அவை தெரிவிக்கின்றன.

ஜெனரல் லாவெல் தென்கிழக்கு ஆசியாவில் அமெரிக்க ஏழாவது விமானப் படையைச்சேர்ந்த நாற்பதாயிரம் விமானப்படையினருக்கும், 400 குண்டு வீச்சுப்போர் விமானங்களுக்கும தளபதியாக இருந்தார். அமெரிக்க ஜனாதிபதி விதித்திருந்த விதிமுறைகளையெல்லாம் அவர் தமது இஷ்டத்துக்கு அர்த்தப்படுத்திக்கொண்டு, வியத்நாமின் மீது தாம் விரும்பியவாறு குண்டுகளை பொழியலாம் என்று தமது விமானிகளுக்கு உத்தரவிட்டாராம். இதனை அவரே ஒப்புக்கொண்டிருக்கிறார்.

தரையில் இருந்து தாக்குதல்கள் வந்தாலன்றி எந்தவொரு பிரதேசத்திலும் அமெரிக்க விமானப்படை குண்டுவீசக் கூடாது என்றுதான் அப்போதைய விதி கூறியது ஆனால் லாவெல் தமது இஷ்டப்படிஉத்தரவுகளை கொடுத்தார் அமைதியான கிராமங்களின் மீது குண்டுகளை வீசி, அப்பாவி மக்களை அழித்தொழிக்கும் விஷயத்தில் தமது விமானிகளை ஊக்குவித்தார். தரையிலிருந்து தாக்குதல்கள் வந்தன என்று அவர்கள் சொல்லி விட்டால் போதுமானதாக இருந்தது.

### தனி நபர் எதேச்சாதிகாரம்

இவ்வாறு நான்கு மாத காலம் நடந்தது. அமெரிக்க ஜனாதிபதியின் பிரத்தியேக பிரதிநிதி ஹென்றி கிசிங்கர் வியத்நாம் ஜனநாயக குடியரசுபிரதிநிதிலேடுதோவை பாரீசில் ரகசியமாகச் சந்தித்து ஒரு சமாதானத் தீர்வுக்கு முயன்றுகொண்டிருந்த காலத்திலும் கூட இவ்வாறே நடந்துகொண்டிருந்தது இந்தக் கட்டத்தில் சமாதானப் பேச்சு வார்த்தைகள் தோற்றுப்போவதற்கு லாவெல்லின் நடவடிக்கைதான் பிரதானமான காரணமாக இருந்திருக்கக்கூடும்என்றும் கூறப்படுகிறது.

எனினும் அமெரிக்க அரசாங்கத்தின் வார்த்தைகளை ஹனாய் நம்பாமற் போனதற்கு—அமெரிக்கா சொல்வேறு செயல்வேறு என நடந்துகொள்கிறது என்று நம்புவதற்கு — இதுவும் காரணமாக இருந்தது என்றே அமெரிக்க அரசியல் நோக்கர்கள் பலரும் கருதினர்.

### ஜெனரலை தடுக்காதது ஏன்?

இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால், இத்தகைய விஷயத்தில் மேலதிகாரிகள் எத்தகைய போக்கினை மேற்கொண்டார்கள் என்பதுதான். ஜெனரல் லாவெல்லின் வாக்குமூலத்தைக்கொண்டும், சந்தர்ப்ப சாட்சியங்களைக் கொண்டும் பார்க்கும்போது புலனாகும் உண்மை,ஜெனரல்லாவெல் அங்கு தாமே ஒரு தனிப்பட்ட யுத்தத்தை நடத்திக் கொண்டிருந்தார் என்பது தான்.

அவர் இவ்வாறு செய்தது வியத்நாமிலுள்ள அமெரிக்கக் கமாண்டர் ஜெனரல் கிரீட்டன் அப்ராம்சுக்கும், ஆசியாவிலும் பசிபிக்கிலும் உள்ள அமெரிக்கத் துருப்புக்கள் அனைத்துக்கும் கமாண்டரான அட்மிரல் ஜான் மக்கெய்னுக்கும் பூர்ணமாகத் தெரிந்துதான் இருந்தது. எனினும் அவர்களில் எவரும் ஜெனரல் லாவெல்லைக் கண்டித்துத் தடுத்து நிறுத்தவில்லை.

மாரோ விமானப்படை சார்ஜெண்ட் ஒருவர் செனட்டர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தின் மூலம்தான் இந்த விஷயம் வெளிவந்துவிட்டது. இந்த விஷயம் அம்பலமான பின்னரும் கூட, லாவெல்லின் மேலதிகாரிகள் இதனை மூடிமறைக்கவே முயன்றனர்: குற்றம் புரிந்த ஜெனரலை வியத்நாமிலிருந்து விலக்கியும், அவரது பதவியில் சிறு இறக்கம் செய்து வேறொரு தலைமையை அவருக்கு வழங்கியும் இந்தக் குற்றத்தை மூடிமறைக்க முயன்றனர். எனினும் இந்தப் பதவி இறக்கம் லாவெல்லுக்கு ''அவமானகரமாக'' இருந்தது. எனவே அவர் ஓய்வுபெற விரும்பினர்; ஒரு நட்சத்திரத்தை இழந்த ஜெனரலாகவே ஓய்வும் பெற்றுவிட்டார். எனினும் ஓய்வு காலத்திலும் அவர் ஆண்டொன்றுக்கு 27 ஆயிரம் டாலர்களைச் சம்பளமாகப் பெற்றுவருவார்.

அமெரிக்க ராணுவத் தலைமையகம் இத்துடன் இந்த விஷயத்துக்கு முற்றுப் புள்ளி வைத்திருக்கக்கூடும். ஆனால் நியூயார்க் டைம்ஸ் இது பற்றிய உண்மைகளை அம்பலப்படுத்திய பிறகு இந்த விஷயத்தை அமெரிக்க காங்கிரஸ் தீவிரமான பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டது, தவறிழைத்த ஜெனரல் லாவேல் ஒரு செனட் கமிட்டியின் முன் ஆஜராகி விளக்கம் தர வேண்டும் என்று அவர்கள் கோரினர். செனட் கமிட்டியின் முன் ஜெனரல் லாவெல் தெரிவித்த தகவல்களைக் கேட்ட பிறகோ, அவர்கள் மேலும் கடுமையான நடவடிக்கை எடுப்பதைப் பற்றி சிந்திக்க நேர்ந்துள்ளது. இதனால் லாவெல் ஒரு விசாரணைக்கு உள்ளாக நேரிடலாம். எனினும் மைலாய் படுகொலையைப் புரிந்த லெப்டினெட் காலி விடுவிக்கப்பட்டது போல், விசாரணை செய்யும் நீதிபதிகள் இவர் குற்றவாளிதான் என்று தீர்ப்பளித்த பிறகும் கூட, இவர் ஜனாதிபதியினால் விடுவிக்கப்பட்டு விடலாம்,

எனினும் இது ஒரு விஷயத்தில் மைலாய் படுகொலையைக்காட்டிலும்மோசமானதாகும். மைலாய்படுகொலையில் அதில் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் எவரும் ஜெனரல் லாவெல்லைப் போல் உயர்ந்த பதவிகளை வகித்தவர்கள் அல்ல. மேலும் அமெரிக்க ராணுவத் தலைமையகத்தில்உள்ள பெரிய மனிதர்கள் உள்பட மேலிடத்தார் எவரும் மைலாய் விஷயத்தில் உண்மைகளை மறைக்கக்கூடிச்சதி செய்யவில்லை.

### முக்கியமான கேள்வி

அமெரிக்க மக்கள் பலர் எழுப்புகின்ற முக்கியமான கேள்வி ஒன்றும் உள்ளது: ''நான்கு நட்சத்திரம் கொண்ட ஜெனரல் ஒருவர் குண்டுவீச்சு பற்றிய சம்பிரதாயமான ஆணைகளை இத்தனை சுலபமாக மீறமுடியுமென்றால், இவரே ஒரு அணுஆயுத யுத்தத்தையும் தொடங்கிவிட முடியும். எவனாவது ஒரு வெறியனின் கையில் அமெரிக்காவின் அணு ஆயுதங்கள் கிட்டிவிடாதபடி பாதுகாப்பு ஏற்பாடுகள் காத்துவர வேண்டும் என அமெரிக்கன் ராணுவத் தலைமையகம் வலியுறுத்திய போதிலும்கூட, இது எல்லோரது மனத்துக்கும் நிம்மதியைத் தந்துவிடவில்லை'' என்பதுதான் அந்தக் கேள்வி (இவ்வாறு ஜுன் 26-ம் தேதி நியூஸ்வீக் பத்திரிக்கை எழுதுகிறது)

இன்னொரு கோணத்தி

(3-ம் பத்தி பார்க்க)

---

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில்(13-முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்; கே. முத்தையா